under some Grants are inevitable. The total of the expenditure excesses which is now sought to be covered by legislative approval is Rs. 19 lakhs roundly against a total final appropriation of Rs. 9,192 lakhs. The explanatory note appended to the Statement of Demands gives the reasons for the excesses in each case. The Public Accounts Committee constituted for the year 1957–58 at its meetings held during the course of the year examined the reasons for the excesses and have recommended in their report published in October 1957 that Demands for Grants to cover the excess expenditure over the final sanctioned appropriation under each Grant might be presented to the Legislative Assembly.

I commend for the acceptance of the House the Statement of Demands for Grants for Excess Expenditure in the year 1954–55.

## VI.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

MR. CHAIRMAN : The next item on the agenda is "Discussion on the Governor's Address". The hon. Member Sri A. Gajapathy Nayagar will now move the motion standing in his name.

SRI A. GAJAPATHY NAYAGAR : Sir, I move—

"That an humble Address be presented to the Governor that the Members of the Madras Legislative Council thank him for the Address[a] delivered to the Members of the Legislature on the 8th February 1958".

SRI A. SUBRAMANYAM : Sir, I second it.

MR. CHAIRMAN : Motion moved—

"That an humble Address be presented to the Governor that the Members of the Madras Legislative Council thank him for the Address delivered to the Members of the Legislature on the 8th February 1958."

SRI MOHAMED RAZA KHAN : Sir, I move the following amendment :—

"Add the following at the end :—

'but regret to note that there is no reference in the Address to some of the important problems affecting the State and the measures to be adopted to solve them'."

The amendment was duly seconded.

MR. CHAIRMAN : Amendment moved—

"Add the following at the end :—

'but regret to note that there is no reference in the Address to some of the important problems affecting the State and the measures to be adopted to solve them'."

The motion as well as the amendment are now before the House for discussion.

---

[a] Printed as Appendix II on pages 46–49 infra.

10th February 1958]

**Sri A. GAJAPATHY NAYAGAR**: சபாநாயகர் அவர்களே, 1958-ம் வருடம் பிப்ரவரி மாதம் 8-ம் நாளன்று சென்னை சட்டசபைக்கு முன் நமது கவர்னர் பெருமான் ஆற்றிய பேருரைக்கு நன்றி செலுத்தும் முறையில் நான் உரையாற்ற விரும்புகிறேன். நமது இந்தியன் யூனியன் குடியாட்சி பெற்று பத்து ஆண்டுகள் நிறைவேறிவிட்டன. சென்னை ராஜ்யம் பெயர் பூண்ட நமது தமிழ் நாட்டில் முதலாவதாக கவர்னர் பதவி தாங்கியவர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள். ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் குணத்திலும், கல்வியிலும் மேம்பட்டவராவர். அவரது காலத்தில் நம் நாட்டில் நாம் களிக்கும் பல ஆற்றல் வேலைகள் செய்யப்பட்டன. அதில் சிறப்பாகச் சொல்லவேண்டியதொன்று. அவர் காலத்தில்தான் நமது இந்தியப் பேரரசுச் சட்டத்தின் 345-வது பிரிவின்படி தமிழ் மொழி தமிழ் நாட்டின் ஆட்சி மொழியாகச் சட்டப்படி செய்யப்பட்டது. இவ்வாறு அவர் நமது அன்பை நன்கு பெற்றார். இடைக்காலத்தில் திரு. ஏ. ஜே. ஜான் அவர்கள் இந்த ராஜ்யத்தின் தலைவராக வந்தார்; வந்து மக்களின் அன்பைப் பெற்றார். ஆனால் சில மாதங்களுக்குள்ளாகவே உடல் நலக் குறைவால் அவர் இயற்கை எய்தினார். அதற்காக, இச்சமயத்தில் நமது வருத்தத்தைத் தெரிவிக்காமல் இருக்க முடியாது. இப்பொழுது நமது சென்னை ராஜ்யத்திற்கு மேன்மை மிக்க தலைவராய் திரு. விஷ்ணுராம் மேதி அவர்கள் கவர்னர் பெருமானாய் அமர்ந்து பணியாற்ற வந்திருக்கிறார்கள். கல்வியிலும், அரசாங்க அனுபவத்திலும் மேம்பாடு உடையவராக, ஆஸாம் ராஜ்யத்தின் முதல் அமைச்சராக அமர்ந்து விளங்கினார். நம் நாடு போன்றே ஆஸாம் நாடும் பிற்போக்கான நிலையில் உள்ளதே. வறுமையில் சிக்கிய நாடாகும் அது. இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்து நாட்டிற்கு ஆக்க வேலைகள் பல அவர் செய்துள்ளார். இப்படிப்பட்ட தன்மையில் நம் நாட்டிற்கும் நலம் பல புரியும் கருத்துள்ளவராக வந்திருக்கும் கவர்னர் பெருமானை நாம் எல்லோரும் மனப்பூர்வமாக வரவேற்கிறோம். இந்தியப் பேரரசு ராஜ்யச் சீரமைப்புச் சட்டப்படி நமது ராஜ்யம் திருந்திய முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. அதுதான் காம்பாக்ட் ஸ்டேட் (**Compact State**) என்று போற்றப்படுகிறது. எஞ்சி நிற்கும் சில எல்லைத் தொல்லைகளை நமது அரசாங்கத்தார் அமைதியான முறையில் தீர்ப்பார்கள். தென்னாடுகள் என்று சொல்லப்படும் தமிழ் 3-40 p.m. நாடு, ஆந்திர தேயம், கேரள நாடு, கன்னட நாடு இவைகளுக்கிடையே ஐக்கிய மனப்பான்மையும் ஒற்றுமை உணர்ச்சியும் வளர்ந்து வருவதைக் காண்கிறோம். கேரள நாட்டின் வழி மேற்கே பாய்ந்து ஓடும் நதிகள், கிழக்கே பாயும் கோதாவரி போன்ற நதிகள் இவற்றின் தண்ணீரைத் தேக்கி இந்நாடுகளுக்குப் பயன் அளிக்கும் வகையில் நாட்டின் முதலமைச்சர்கள் எல்லாம் ஒன்றுகூடிப் பேசி வருவதை நாம் பெரிதும் பாராட்டுகின்றோம். இந்நட்பு முறையைக் கவர்னர் பெருமானும் பாராட்டுகின்றார்.

இந்த வகையிலேயே "ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு" எனும் சீரிய கொள்கைக்கு இணங்க நமது இந்தியப் பேரரசு ராஜ்யங்களுக்கெல்லாம்— ஒற்றுமை உணர்ச்சியை ஏற்படுத்தி எல்லோரும் சேர்ந்து ஒரே ஒற்றுமை உணர்ச்சியோடு ஒத்துழைக்கவேண்டும். இந்த ஒற்றுமையே நம் நல் வாழ்வுக்கு அடிகோலுவதாக அமையும். முதலில் நாம் எல்லோரும் ஒன்றுபட்டே இந்திய நாட்டின் விடுதலையை அடைந்தோம். இந்த ஒற்றுமையைக் காத்து மென்மேலும் வளர்க்கவேண்டியது நன் மக்களின் சிறந்த முயற்சியாகும். இந்த அடிப்படையிலேயே நம் நாட்டு மக்கள் அடையவேண்டிய நன்மைகளையெல்லாம் பெறுவதும் சீரிய முறையாகும். இவைகளையெல்லாம் உணர்ந்தே தமது பேருரையில் கவர்னர் பெருமான் அவர்கள் நாட்டின் ஒற்றுமையை வலியுறுத்துகின்றார். இந்த ஒற்றுமையை எந்தவிதத்திலும் நிலை குலையாமல் காக்கவேண்டிய பொறுப்பு நம்முடையதாகும். இந்தியப் பேரரசின் ஒற்றுமை ஐக்கியத்தைக் குலைக்க வரும் தீய சக்திகளை நம் நாட்டில் தலைகாட்டாதபடி தடுப்பது நம்முடைய கடமையாகும்.

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு"

என்று ஒரு நாட்டின் சிறப்பைப்பற்றித் திருவள்ளுவர் பெருமான் அவர்கள்

[Sri A. Gajapathy Nayagar] [10th February 1958

எடுத்து ஓதுகின்றார்கள். கவர்னர் பெருமான் அவர்கள் தம் பேருரையில் எல்லாப் பணிகளைப்பற்றியும் குறிப்ப தென்றால், அது இயலாத காரியமாகும். ஆயினும் சிறப்பான பணிகளை எடுத்துக்காட்டுகிறார்.

தமிழ் மொழியை ஆட்சி மொழியாகச் செய்வித்த வகையில் இந்த ஆண்டு தைப்பொங்கல் நன்னாள் முதல் **1,922** அலுவலகங்களில் தமிழ் மொழியைக் கையாளும் அரசாங்கத்தாரையும் அவர்களுடைய செய்கை களையும் நான் பாராட்டுகின்றேன், வாழ்த்துகின்றேன். தமிழ் மொழிக்கு முதலிடம், எல்லாத் துறைகளிலும் முதலிடம், பின் இந்தியப் பேரரசு மொழியாகிய இந்தி மொழிக்கு சிறப்புற்ற இடம், மேலும் ஆங் கிலத்திற்குத் தக்க இடம் அளிப்பது—இந்த வகையில் திட்டத்தை வகுத்த நம் சென்னை அரசினரைப் பாராட்டுகின்றேன். ஆங்கிலம் கற்கவேண்டி யது அவசியம்தான். ஆனால் ஆங்கிலம் தான் நீடூழியாக எல்லா இடங் களிலும் ஆட்சி செய்யவேண்டுமென்பது பொருத்தமான பேச்சாக இருக்க முடியுமா? அறன் அறிந்து மூத்த அறிவுடையார் நம் நாட்டில் பலர் இருக்கிறார்கள். அவர்கள் சொல்வது என்னவெனில் நம் தமிழ் மொழியை, காலம் தாழ்த்தாது, போற்றி வளர்ப்பது நமது தலையாய கடமையாகும்: தமிழ் இல்லையேல் நாமும் இல்லை, நம்முடைய நாகரீகமும் இல்லை.

"உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும்
சேராதியல்வது நாடு"

என்று வள்ளுவர் பெருமான் அவர்கள் கூறுகிறார்கள். இவ்விதம்தான் ஒரு நல்ல நாடு, அதாவது வெல்பேர் ஸ்டேட் **(Welfare State)** ஆகும். பசிப்பிணியைப் போக்குவது அரசினர் முதற் கடன். ஆதலால், நாட்டின் உணவுப் பொருள்களைப் பெருக்கவேண்டும். இதற்கென நன் முயற்சியோடு பாடுபடவேண்டும். உண்ணுவதற்கு அரிசி குறைவாக இருக்கும்பொழுது நிலத்தில் கரும்பு பயிர் செய்வது முறையாகுமா? நஞ்சை நிலங்களைப் பயிரிட்டு நெல் விளைவு பெருக்க தண்ணீர் தேவைதான். ஆயினும் ஒரு விளைவிலேயே நல்ல உற்பத்தி காணும்போது இரண்டு விளைவுக்கென தண்ணீர் விட்டு சேதப்படுத்தி, விளைவுப் பொருள் குறைவாகத்திரட்டினால், அது முறையாகுமா? பசிக்கு உதவாத உணவு போல், வேண்டும் காலத்தில் உரம், விதை நெல் முதலியவைகளைத் தக்க சமயத்தில் உழவர்களுக்குக் கொடுத்து உதவாவிட்டால், அதிகாரிகளின் செய்திறனை எவ்வாறு பாராட்டுவது? அதே போன்று நிலத்தை உழவர்களும் நன்றாக உழ வேண்டும். அவ்வாறு உழுதால் எருவும் இடுதல் வேண்டாம் என்று பெரியோர்கள் கூறுகின்றனர். ஆனால் உழாமலே எத்தனை இடங்களில் நிலங்கள் கரம்பாகப் போடப்பட்டிருக்கின்றன. பல இடங்களில் பயிரிடப் பட்டதும் அறுவடை செய்யப்படாமல் பாழ் செய்யப்படுகின்றன. இவ்வாறு மக்களிடையே அன்பு குறைந்து வருவதையும் பகைமை உணர்ச்சி பெருகு வதையும், வீண் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு வருவதையும் பார்க்க மனம் கலங்குகிறது. என் பொதுப்பணிகளிலே நம் நாட்டுத் தலைவர்கள் எல்லாம் ஒத்துழைக்கக்கூடாது? இடித்துப் பேசும் மக்களாயினும் சரி, நாம் அவர்களை இடிக்கும் துணையார் என்று கருதி அவர்களை அணைத்துக் கொள்ளவேண்டும்.

வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைச்செயல்வகை என்று மூன்று அதிகாரங்களில் திருவள்ளுவர் தம் திருக்குறளில் எடுத்துக்காட்டுகிறார். இம்முறையைக் கையாண்டால் எல்லாப் பணிகளையும் பயன்படும் வகையில் நாம் செய்யலாம். அப்போதைக்கப்போது எழும் பிரச்னைகளை நல்ல வழியில் தீர்த்து வைப்பது, குறைகள் ஏற்பட்டால் நிறைவு படுத்துவது, சட்டங்களைத் தக்க முறையில் வகுப்பது, வேண்டுங்கால் அதை மாற்றி யமைப்பது, இவைகளையெல்லாம் செய்ய வேண்டியது சட்டசபைகளின் கடமைகளாகும். இவ்வாறாக நிலச் சீர்திருத்தம் செய்யவேண்டிய திருக்க, நிலச் சீர்திருத்தம் வேண்டாம் என்று சொல்லுபவர்கள் இக் காலத்திலும் இருக்கிறார்களே. உழைக்கும் உழவனுக்கு நிலம் இல்லை யென்றால், பின் யாருக்குத்தான் நிலம் வேண்டும்? ஆயினும் நிலம் படைத்த அதிபர்களுக்குத் தீங்கு விளையா வண்ணம் நிலக்கோடை **(fixing of ceiling on land),** நல்ல முறையில் அமைப்

10th February 1958] [Sri A. Gajapathy Nayagar]

போம். வீண் வாதம் செய்துகொண்டு நீதி மன்றங்களுக்குச் சென்றாலும், சட்டத்தைத் திருத்தி அமைக்க சட்ட மன்றங்களுக்கு அதிகாரம் இருக்கிறது. நீதி மன்றத்தாரும் சட்டமன்றத்தில் இயற்றிய சட்டத்தைத் தானே அமுலுக்குக் கொண்டுவரவேண்டும். இதையெல்லாம் உணர்ந்து ஒற்றுமை உணர்ச்சியோடு நாட்டுக்காகப் பணியாற்றுவது சான்றோர் கடனாகும்.

நம் தமிழ் நாட்டில் கனரகத் தொழில்கள் மிகக் குறைவாக இருக்கின்றன. இக்குறையை நீக்க முதலாவதாக நெய்வேலித் திட்ட வேலையைத் துரிதப்படுத்த வேண்டும். அவற்றிலிருந்து பழுப்பு நிலக்கரியும், மின்சார உற்பத்தியும் பெருகுமானால், அவைகளைக்கொண்டு சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் இவைகளைப் பெருக்கலாம். இச்சிறு தொழில்களே பெரிய தொழில்களுக்குத் துணையாய் நிற்கும். எவ்வாறு சிறு நதிகளெல்லாம் சேர்ந்து பெரிய ஆறாகப் பாய்கிறதோ, அதே போன்று கனரகத் தொழில்களுக்குச் சிறு தொழில்கள், மின்சார உதவி கொண்டு பல உதவிகளைச் செய்யும். இவ்வாறு செய்வதால் எல்லா மக்களுக்கும் போதுமான வேலை கிடைக்கும். மக்களுக்கு வேண்டிய தேவைகளையும் அவர்கள் தாமே பூர்த்தி செய்துகொள்வார்கள். உணவுக்கு அடுத்தாற்போல் உடைகள் தேவையை நல்ல வழியிலே பூர்த்தி செய்துகொள்ளலாம். அதற்காகக் கைத்தறியை வளர்க்கலாம். எல்லாவற்றிற்கும் பணம் தேவை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முயற்சிகளை நீங்கள் அறிவீர்கள். இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதில் தான் நம் நாட்டின் முன்னேற்றம் அடங்கியிருக்கின்றது. நம் தேவைகளுக்காகக் கடன் வாங்கலாம். கடன் வாங்க வேண்டிய இடங்களில் நம் நாட்டுக்கு ஊறு விளையா வண்ணம் வாங்கலாம். ஆயினும் தன் முயற்சி வேண்டும். நம் நாட்டிலேயே தேவைப்பொருள்களைத் தேடிக்கொள்ளலாம். ஏழை மக்களுக்கு வாழ்வு அளித்துக் காக்கும் கதர் ஆடை அணியலாம். கைத்தறி ஆடைகளைப் பெருவாரியாகக் கையாளலாம். ஆடம்பர வாழ்க்கை விடுத்து சிக்கன முறையில் வாழ்ந்தால் கையில் பணம் சேரும். அக்கைப்பணத்தைச் சிறு சேமிப்பு நிதிகளாக அரசாங்கத்தாருக்குக் கொடுத்து உதவலாம். இவ்வாறு உதவுவது மக்கள் கடன் அல்லவா? மக்கள் ஆட்சியிலே மக்கள் நன்மைக்கு என வாங்கப்படும் நிதிகள் நல்வழியில் பயன்படுத்தப்படும் என்பதில் சிறிதும் ஐயம் கொள்ளவேண்டாம்.

மக்கள் சமூக வளர்ச்சிக்கு உள்ளாட்சி மன்றங்கள் தேவை. அரசியலில் ஈடுபட்டு நல்லறிவுடன் பணியாற்றுவதே மக்களின் முதற்கடன். இவ் விதத்தில் உள்ளாட்சி மன்றங்களைச் சீர்திருத்தி அமைக்கக் குழு ஒன்று பணியாற்றி வருகிறது. உள்ளாட்சி மன்றங்கள் சிறு கால்வாய்கள் போன்றவை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி பணத்தைத் தண்ணீர் போல் தேக்கி வைத்தாலும், நன்றாகத் தண்ணீரைப் பாய்ச்சுவதுபோல் நாடு முழுவதும் பரவிப் பாய்ந்து பயன்படுத்த உள்ளாட்சி மன்றங்கள் தேவை. இதைத்தான் "டெமோகிராடிக் டீஸெண்டிரலைஸேஷன்" என்பர். குற்றங்குறைகளைக் களைந்து நல்ல முறையில் செயல்படுத்த, ஒற்றுமை உணர்ச்சி வேண்டும். வினையும் தூய்மையாக இருக்கவேண்டும். 3-50 p.m.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி தேசிய நலத் திட்டத்தையும், சமுதாய நலத் திட்டத்தையும், நமது மத்திய அரசாங்கத்தார் தீவிர முறையில் கையாளுகிறார்கள். நம் ராஜ்யத்தில் அம்மாதிரி 135 வட்டாரங்கள் இருக்கின்றன. 1957-ம் ஆண்டு, நவம்பர் மாதம் 25-ம் தேதியன்று, வட்டார அபிவிருத்தி அதிகாரிகள் மாநாடு கூடி, அக்கூட்டத்தைத் துவக்கி வைக்கும்போது, நமது முதலமைச்சர் அவர்கள் அறிவுரை ஆற்றியிருக்கிறார்கள். முன்னேற்றத் திட்டங்களுக்கு உகந்த புத்துணர்ச்சியைக் கிராம மக்களிடையே உண்டாக்கவேண்டியது நம் முதல் கடமையென்றும், அவர்களுடைய பொருளாதார நிலையை உயர்த்தவேண்டிய பொறுப்பும் நம்முடையதென்றும் அவர் கூறியிருக்கிறார். பின்னர் கிராமப் பஞ்சாயத்துகளைக் கொண்டே கிராம நலத் திட்டங்களை வகுத்தலும் நிறைவேற்றலும் தேசிய நலத் திட்டத்திற்கு அடிப்படை என்று இந்திய சர்க்கார் திட்டக் கமிஷன் வற்புறுத்தி வந்தது. தேசிய விஸ்தரிப்பின் சேவையுடன் ஆரம்பக் கல்வி தீவிர அபிவிருத்தித் திட்டமும் இணைந்திருக்கிறது. இந்த

[Sri A. Gajapathy Nayagar] [10th February 1958

வகையில் மதுரை தாலூக்காவை மூன்று பிரிவுகளாகப் பிரித்து, வட மதுரை தாலூகா பிரிவில் பஞ்சாயத்துகளைத் தக்க முறையில் செயல்படுத்தி நமது முதல் அமைச்சர் வழிகாட்டியிருக்கிறார். கூட்டுறவு முறையில் கிராமங் களில் கட்சி பேதங்கள் குறைந்து வரவும், தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இவ்வாறாக நம் நாட்டு அமைச்சர்கள் பணியாற்றி வருவதை மக்கள் உணருகிறார்கள், போற்றுகிறார்கள், ஒத்துழைத்துப் பணியாற்ற முன் வருகிறார்கள். இடைவிடா முயற்சியோடு நம் அமைச்சர்கள் நாட்டுப் புறங்களுக்குச் சென்று மக்களுடன் பழகி நல்லவை எல்லாம் செய்ய வேண்டுகிறேன்.

ரோடு வசதிகள் நம் நாட்டுக்கு நரம்பு போன்றவைகள். கிராமங் களுக்கு ரோடுகள் போட்டுக் கொடுத்தால்தான் மக்கள் நகரங்களுக்கு வரவும், கல்வி முதலியன பெறவும், வாணிபம் செய்யவும் உதவியாகும். நகரங்களிலும் போக்குவரத்து சாதனமாகிய பஸ்களை நல்ல முறையில் கையாள வேண்டியது அரசியலார் பொறுப்பு. ஒழுங்கான முறையில் அவைகளை நடத்தி வைக்க பொறுப்புள்ள அதிகாரிகள் பணியாற்ற வேண்டும். பெண்களுக்கு பஸ்களில் மிகுதியாகத் தனி வசதி செய்து கொடுக்கவேண்டும்.

உடல் நலனுக்காகத் தேவைப்படும் மருத்துவச்சாலைகளைப்பற்றிப் பேருரை யில் சொல்லாவிடினும், நம் அரசியலார் எல்லா மருத்துவ முறை களுக்கும், சித்த வைத்தியம், அலோபதி, ஹோமியோபதி, யுனானி போன்றவைகளுக்கு ஆக்கம் அளிப்பார்களென நம்புகிறேன். தமிழ் நாட்டில் சிறப்புற்று இருந்த சித்த வைத்தியத்தைப் புறக்கணித்து வைப்பது பாதகச் செயலாகும். மக்களில் மாணிக்கம் போன்ற நம் நில, நலத் துறை அமைச்சர், சித்த வைத்தியத்தை வளர்க்கும் வழி தேடவேண்டும். அதற்கென அவர் கல்லூரிகள், ஆராய்ச்சிக் கூடங்கள், மருந்து செய்யும் கிடங்குகள் எல்லாம் ஆக்கிவைப்பார் என்று மக்கள் ஆவலுடன் எதிர் பார்க்கிறார்கள்.

நம் பெண்மக்கள் உடல் நலம் குன்றியும், நோய்வாய்ப்பட்டும் வருகிறார் கள். அடிக்கடி உண்டாகும் பிரசவத்தால் அநேகப் பெண்கள் அவதி யுறுகிறார்கள். பெற்றெடுத்த குழந்தைகளும் உடல் மெலிந்து, வலுவின்றி இருக்கின்றன. இவ்வகையில் நாட்டில் மக்கள் பெருக்கு அதிகமாகிக் கொண்டே வருகிறது. மருத்துவத்தைச் சீரிய முறையில் ஆக்கும் வண் ணம், உடல் நலம் குன்றிய தாய்மார்களுக்கும், ஏழைப் பெண்களுக்கும், கர்ப்பத் தடை போன்ற சலுகை முறைகளை அரசியலார் கையாளவேண்டும். நாட்டு மக்கள் உடல் நலம் பேண தக்கதோர் ஹெல்த் ஆக்ட் கொண்டு வரவும் வேண்டுகிறேன். நம் நாட்டு மருத்துவர்களின் உதவியை அரசாங் கம் நல் வழியில் பெறலாம்.

மதுவிலக்குச் சட்டம் அமுலிலிருந்தும், கள்ளச் சாராயம் காய்ச்சுதல், குடித்தல், விற்பனை செய்தல் எல்லாம் நாட்டில் பெருகிக்கொண்டே வருகின்றன. மக்கள் உடல் நலமும் குன்றி வருகிறது என்ற பேச்சாக இருக்கிறது. மதுவிலக்குச் சட்டத்தை இன்னும் திருந்திய முறையில் உடனடியாகச் செய்விப்பது நல்லது.

மேலும், நம் நாட்டுக் கோவில்கள், மடங்கள், மத நிலையங்கள், தர்ம நிலையங்கள் இவைகளையெல்லாம் நல்ல முறையில் கண்காணிக்கும் வண்ணம் சட்டம் செய்யவேண்டும். நம் நாட்டில் பிறந்து, அறவழியை யும் அருள் வழியையும் போற்றிப் பாடிய சித்தர்கள் இருக்கிறார்கள். சிறப்பாகச் சொல்ல வேண்டின், திருவள்ளுவர், அருட்பிரகாச வள்ளலார், சென்னையிலும், வடலூரிலும் வாழ்ந்தவர்கள். உலக மக்களுக்கெல்லாம் பயன்படும் சுத்த சமரச சன்மார்க்கத்தைப் போதித்தார்கள். இவ்வண்ணம் நாயன்மார்களும், ஆழ்வார்களும் நம் தமிழ் நாட்டில் பல இடங்களில் கோவில் கொண்டிருக்கிறார்கள். தமிழ்ச் சங்கத்திலும் தனித் தலைவராய்

விளங்கிய நக்கீரர் மதுரையிலும், இராமாயணம் பாடிய கம்பர் கம்பர்மேடு கிராமத்திலும் கோவில் கொண்டிருக்கிறார்கள். கலைப் பண்புகளை யெல்லாம் வளர்த்தவர்கள்—

" பெயர் கண்டும் நஞ்சுண்டு அமைவர்
நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர் "

என்று நம் நாகரிகத்தைப் போற்றி வளர்த்தார்கள். அவர்கள் வாழ்ந்த புனிதமான இடங்களைப் பாதுகாத்துக் கண்காணிக்கவேண்டியது நமது அரசியலார் கடனாகும். சீறிய முறையில் விடுமுறை நாட்களைக் குறிப்பிடுதல் வேண்டும். திருவள்ளுவர் இயற்கை எய்திய திருநாளையும், திருவருட் பிரகாச வள்ளலாரது தைப்பூசத் திருநாளையும் நம் தமிழ்நாட்டு விடுமுறை நாட்களாக ஏற்படுத்தவேண்டும். இந்த நாட்களை நாட்டின் தொழிலாளர் விடுமுறை நாட்களாகப் பயன்படுத்துவது சிறந்ததாகும்.

மனிதன் தனித்து இயங்கும் சக்தி பெற்றவனாயினும், கூட்டுறவு முறையால்தான் வளர முடியுமென்பது எல்லோரும் கண்ட உண்மையாகும். நம் உடலுறுப்புகள் தனிப்பட்ட வேலைகள் செய்ய சக்தி பெற்றிருந்தாலும் உடலுக்கு ஊறு வராமல் காப்பது அவைகளின் கடன். இல்லையேல் அவைகளும் வாழ முடியாது. இது போன்றே பாடி பாலிடிக்—அரசியலும்—கூட்டுறவு முறையில் அமையவேண்டும். தனிப்பட்ட தொழில்களை வளர்ப்பது கூட்டுறவு. அதுபோலவே, நாட்டின் அங்கங்களாக இருக்கும் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண், ஆறும் நாட்டிற்குப் பாதுகாப்பாகும். அமைச்சர் பகுதியில், அலுவலக ஆபீஸர்கள், குமாஸ்தாக்கள், மருத்துவர்கள், ஆசிரியர்கள் எல்லோரும் நாட்டின் அங்கங்களாகக் கருதி ஒத்துழைக்கவேண்டும். தங்களுக்கெனவே சலுகை கேட்டாலும், மற்றவர்களுக்கும் கெடுதி செய்யாவண்ணம் இருக்கவேண்டும். அது போல், தொழிலாளர்களும் பெறும் ஊதியத்தை வீண் செலவு செய்யாமல் வாழவேண்டும். ஆதலின், நாட்டில் ஒற்றுமை மனப்பான்மை, தொழில்களில் கூட்டுறவு இயக்கம், பெருகி வந்தால் நாம் இயற்றிய திட்டங்களை யெல்லாம் நிறைவேற்றி, மக்களை இன்புற்று வாழச் செய்யலாம்.

இதுவே இறைமாட்சி என்று சொல்லிக்கொண்டு, இம்மன்றத் தலைவருக்கும் சான்றோர்களுக்கும் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஜெய் ஹிந்த். வாழ்க தமிழ்நாடு.

* **Sri K. V. RAMASWAMY** : அவைத் தலைவர் அவர்களே, இன்று முதன் முதலாக இந்தச் சபையில் என்னுடைய பிரசங்கத்தை நிகழ்த்த ஆசைப்படுகிறேன். இதற்கு முன்பு நான் சட்டசபை விவாதங்களில் கலந்து பேசியது கிடையாது. இது என்னுடைய முதல் பேச்சாகையால், தப்புத் தவறுகள் இருப்பினும், தலைவர் அவர்கள் மன்னித்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். இன்று நான் பேச வேண்டிய விஷயம் என்ன என்பதே எனக்கு விளங்கவில்லை. இருந்தபோதிலும், தலைவருடைய உத்திரவிற்கிணங்க, இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இப்போது எனக்கு முன்பாகப் பேசிய எனது நண்பர் பல விஷயங்களைப் பற்றி எடுத்துரைத்தார். நானும் அதைத் தொடர்ந்து இரண்டொரு வார்த்தைகளைப் பேசலாமென நினைக்கிறேன்.

நமது கவர்னர் அவர்கள் இப்போது புதிதாகச் சென்னைக்கு வந்திருக்கிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அவர்களுடைய சரித்திரத்தைப் பத்திரிகை வாயிலாக நீங்கள் எவ்வாறு அறிந்திருக்கிறீர்களோ, அவ்வாறே நானும் அறிந்திருக்கிறேன். அவர்கள் மிகுந்த தேச சேவையில் ஈடுபட்டவர்கள் என்பதை அறிந்து அனைவரும் சந்தோஷப்படக் கடமைப்பட்டிருக்கிறோம். ஏனென்று கேட்டால், தேச சேவையில் ஈடுபட்டவர்கள் நல்ல சேவை செய்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. வட நாட்டாராயிருந்தாலும் சரி, தென்னாட்டாராயிருந்தாலும் சரி, மத்திய

நாட்டாராயிருந்தாலும் சரி, மக்களுக்கு சேவை செய்வார்கள் என்பதை நிரூபித்திருக்கிறார்கள். ஆகவே, அவர் எந்த இடத்திலிருந்து வந்தாலும், சேவை மனப்பான்மையைத் தவிர வேறு எதுவும் அவரிடத்தில் காண முடியாது. அவர் சேவை செய்ய நாம் அனைவரும் அவருக்குத் துணையாக இருக்க வேண்டும். நம்முடைய நாட்டிற்கு நலன் பெறுவதற்கு அன்னாருடைய ஒத்துழைப்பு நமக்கு அத்தியாவசியமாகில், அவர் வேண்டுகோளுக்கு இணங்கி நாம் அனைவரும் அவருடன் ஒத்துழைப்பது நம்முடைய முதல் கடமையாகும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

4 p.m. இரண்டாவதாக, விவசாயத்தைப்பற்றி நாம் எடுத்துக்கொள்ளவேண்டிய பொறுப்பு மிகவும் முக்கியமானது. அது நம் முக்கியமான கடமை. நான் ஒரு கிராம வாசி, அதிலும் ஒரு விவசாயி என்ற முறையிலே இந்தச் சபையிலே தெரிவித்துக்கொள்ள வேண்டிய முக்கியமான விஷயம் புகையிலை பயிரிடுவது பற்றியது. கிராமங்களிலே புகையிலை பயிரிடுவது பற்றி பெரும் ஆட்சேபணைகள் இருந்துகொண்டிருக்கின்றன. பல இடங்களிலே புகையிலை விவசாயம் நிறுத்தப்பட்டிருக்கிறது. காரணம் என்னவென்றால், புகையிலையை விற்பதற்கு வழியில்லாமல் எருக் குழியிலே தள்ள வேண்டியிருக்கிறது. பாடு பட்டதற்குப் பலன் இல்லாமல் நஷ்டம் ஏற்படுகிறது. ஆகையினால், புகையிலை என்று சொன்னாலே, அதை விவசாயம் செய்ய பயமாக இருக்கிறது. சில இடங்களிலே புகையிலையை ஏன் விவசாயம் செய்ய வேண்டும், அது என்ன உண்ணுவதற்காகவா என்று கருதுகிறார்கள். அதை விவசாயம் செய்வது உண்பதற்காக அல்ல. புகையிலை வைத்த காட்டிலே, மற்ற தானியப் பயிர்களைப் பயிர் செய்வார்களேயானால், எந்த விவசாயியும் இதிலிருந்து இரட்டிப்பு மடங்கு தானியத்தை உற்பத்தி செய்ய முடியும் என்பதை என்னுடைய அனுபவ ரீதியாக நான் சொல்ல ஆசைப்படுகிறேன். புகையிலையைப் புரட்டாசி மாதம் வைக்கிறார்கள். ஐப்பசி, கார்த்திகை போக மார்கழி மாதம் வெட்டுகிறார்கள். சில இடங்களில் ஐப்பசி மாதத்தில் வைத்து, தை மாதம் வெட்டுகிறார்கள். இது மூன்று மாதப் பயிர்தான். இந்த மூன்று மாதங்களில் தண்ணீர் இறைவு குறைவு. இந்த சந்தர்ப்பத்தில் வேறு தானியங்கள் பயிர் செய்ய முடியாது. வேறு தானியங்களைப் பக்குவமாகப் பயிர் செய்வதற்கு ஏற்ற நிலைமையிலே இந்த 'சீஸன்' இல்லாத காரணத்தினால், புகையிலை பயிரிடுவதற்கு இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம். இதிலிருந்து வரக்கூடிய பணத்தைக் கொண்டு மற்றக் காரியங்களைச் செய்வதற்கு குடியானவர்களுக்குப் பண வசதி ஏற்படுகிறது. ஆகவே, உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்குப் புகையிலையைப் பயிர் செய்வது அத்தியாவசியம். அதன் பலனாக உணவு தான்யத்தை நாம் அதிகமாக விளைவிக்க முடியும் என்பதை நான் என்னுடைய அனுபவத்திலிருந்து சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த நிலைமையிலே, புகையிலைக்கு அதிக வரிகளைப் போட்டிருப்பதால், அநேகம் பேர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படி பாதிக்கப்பட்டுள்ள குடியானவர்களில் அடியேனும் ஒருவன் என்பதைத் தாழ்மையுடன் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

புகையிலையைப் பயிர் செய்ததில் என்னுடைய அனுபவத்தை மட்டும் நான் சொல்லுகிறேன். டாக்டர் சிவானந்தம் அவர்களும் மார்கெடிங் சொஸைடியில் ஒரு டைரக்டர். நானும் அதில் ஒரு டைரக்டர். மார்கெடிங் சொஸைடி மூலம் உதவி பெறுவதற்கு பழக்கம் செய்ய வேண்டுமென்பதற்காக, என்னுடைய புகையிலையை இந்த சொஸைடியில் வைத்துக் கடன் வாங்கினேன். அதன் மதிப்பின் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் கடன் கொடுக்கக்கூடாது என்ற முறையிலே, அப்பொழுது உள்ள விலையில் மூன்றில் ஒரு பங்கு எனக்குக் கடனாகக் கொடுக்கப்பட்டது. எண்பது ராத்தல் கொண்ட 33 மூட்டைகளை வைத்து ரூ. 400 கடன் பெற்றேன். ஆனால் அந்தப் புகையிலையைச் சரியான விலைக்கு விற்க முடியவில்லை. புகையிலைக்கு வரி போட்டதால் வியாபாரமே ஆகவில்லை என்று மக்கள் நினைத்தார்கள். நானும் கூட நினைத்தேன். கேட்பாரற்ற நிலைமையிலே கிடந்தது அந்தப் புகையிலை. அதில் போட்ட பணத்தைத் திரும்பி எடுக்க

10th February 1958] [Sri K. V. Ramaswamy]

முடியவில்லை. அந்த நிலைமையிலே நானும் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. ஆகையால் அந்தப் புகையிலையை மார்கெடிங் சொஸைடி ஏலத்தில் போட்டார்கள். அந்த ஏலத்தில் வட்டிக்குத்தான் அந்தப் புகையிலை ஏலம் போயிற்று என்றால், அந்தப் புகையிலை விவசாயம் எப்படிச் செய்வது ? அதை விவசாயம் செய்யக்கூடிய குடியானவர்கள் எவ்வாறு முன்னேற முடியும் என்பதை நாம் அனைவரும் ஆழ்ந்து சிந்தனை செய்ய வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். இம்மாதிரியான விவசாயிகளின் கஷ்ட நிலைமையை நிவர்த்தி செய்ய வேண்டும். உணவு தானியத்தை அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டுமென்றால், புகையிலையை அவசியம் பயிரிட வேண்டுமென்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை, எண்ணமும் கூட. ஆகவே, அதைச் செய்து முடிக்க வேண்டும், முடிப்பார்கள் என்ற எண்ணமும், நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது. அதனால் இந்த விஷயத்தைப்பற்றி அதிகப்படியாகப் பேச நான் ஆசைப்படவில்லை.

அதே போல தொழிலாளர்களுடைய இயக்கத்திலும் நாம் அதிகமாகப் பங்கு கொள்ள வேண்டும். சர்க்கார் தொழிலாளர்கள் விஷயத்திலே பல நன்மைகளைச் செய்திருந்தாலும்கூட, தொழிலாளர்களிடையே பல கட்சிகள் ஏற்பட்டு அவர்களுடைய சம்பாத்தியத்தை வீண் விரயம் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று முன்னாலே பேசிய நண்பர் கூறினார்கள். ஆகவே, அவர்களுக்குத் தகுந்த வழி காட்ட சர்க்கார் அவர்களுடன் அதிகத் தொடர்பு கொள்ள வேண்டும். அவர்கள் அதிகப் பங்கு வேலை செய்ய வேண்டுமென்பதற்கு அனுசரணையாகத் தொழிலாளர்கள் மில் ஒன்றை ஏற்படுத்தி, அவர்களுக்கு ஊக்கம் கொடுத்து, அவர்களுக்கு அதிலிருந்து நாமும் முதலாளிகள் ஆகிறோம் என்ற மனப்பான்மையை உண்டுபண்ணி அவர்களை உண்மையான உழைப்பாளர்களாக, சேவகர்களாக ஆக்க வேண்டும். தொழிற்சாலை நிர்வாகத்தில் அவர்களுக்கும் பங்கு உண்டு என்ற நிர்ப்பந்தத்தோடு அவர்களை முன்னுக்குக் கொண்டுவருவோமானால் அவர்கள் அதிலிருந்து அதிக நன்மை பெறுவார்கள் என்பது என்னுடைய உண்மையான அபிப்பிராயம். அந்த முறையிலே அவர்களுக்கு வேண்டுவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

* **Sri A. SUBRAMANYAM :** கனம் தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்களுடைய உரையை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஆரம்ப உரையிலேயே கவர்னர் பெருமான் இந்த நாட்டிற்காகத் தன்னுடைய ஒத்துழைப்பையும் அன்பையும் அளிப்பதாகக் கூறியிருப்பது நாம் மனமார வரவேற்றுப் போற்றக்கூடிய ஒரு விஷயமாகும். அவர் வெகு தூரத்திலிருந்து இங்கு வந்து நம்முடன் தோளோடு தோள் சேர்ந்து சேவை செய்ய முன்வந்திருக்கிறார். அவர் வருங்காலத் தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்குப் பெரும் வழி காட்டியாக இருப்பார் என்பதை நாம் மறந்துவிட முடியாது. ஆனால், துரதிருஷ்டவசமாக, அவர் இந்த நாட்டைச் சேர்ந்தவரல்ல என்று பகிஷ்கரிப்பதாகக் கூறி விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிறிய கூட்டம் அர்த்தமில்லாமல் சட்ட சபைக்கு வரவில்லை. இது கண்டு நான் மிகவும் வருந்துகிறேன். இந்தியா தேசம் பரந்த தேசம். அது பல ராஜ்யங்களைக் கொண்டது. மத்திய அரசாங்கம் எல்லா ராஜ்யங்களுக்கும் பொறுப்பாக ஆட்சி செய்கிறது. அந்த நிலையிலே ஒரு ராஜ்யத்துக்குரியது என்று மத்திய அரசாங்கத்தைக் கருதிவிட முடியாது. மத்திய அரசாங்கம் எல்லா ராஜ்யங்களையும் தன்னுடைய பொறுப்பில் ஆட்சி செய்கிறது. இந்த நிலையிலே சென்ற பல வருஷங்களாக, அதாவது நமக்கு சுதந்திரம் கிடைத்து பத்து வருஷங்களாய் மத்திய அரசாங்கத்தின் பிரதிநிதியாக யார் யார் எந்தெந்த ராஜ்யத்தில் கவர்னராக இருந்திருக்கிறார்கள் என்பதைச் சற்றுக் கவனித்துப் பார்க்கும்பொழுது, நம்முடைய தமிழ் நாட்டைச் சேர்ந்த காலம் சென்ற குமாரசாமி ராஜா அவர்கள் ஒரிஸ்ஸா கவர்னராக இருந்திருக்கிறார்கள். ஒரியா பாஷை பேசப்படும் ஒரு ராஜ்யத்திற்குத் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் கவர்னராக இருக்கக்கூடாது என்று அங்கு இருக்கக்கூடியவர்கள் கருப்புக் கொடி காட்டினார்களா, அல்லது பகிஷ்கரித்தார்களா? அடுத்தபடியாக, விந்தியப் பிரதேசத்திற்கு ஸ்ரீ கே. சந்தானம் அவர்கள்,

[Sri A. Subramanyam] [10th February 1958

தமிழ் நாட்டைச் சேர்ந்தவர், கவர்னராக நியமிக்கப்பட்டார்கள். அப்பொழுது, அவர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர், அவருக்கு விந்தியப் பிரதேசத்தில் என்ன உரிமை இருக்கிறது, அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒருவரை அல்லவா நியமிக்கவேண்டுமென்று அப்பிரதேச மக்கள் கருப்புக் கொடி காட்டினார்களா ? அதே போல் மேற்கு வங்காளத்திற்கு நம் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி அவர்களைக் கவர்னராக நியமித்தார்கள். மேலும் கூறப்புகுவோமானால், பரந்த இந்திய தேசத்திற்கே முதல் கவர்னர் ஜெனரலாக அவரை நியமித்தார்கள். அப்பொழுது வட நாட்டில் இருக்கக்கூடியவர்கள் எல்லோரும் சேர்ந்துகொண்டு தமிழ் பேசும்படியான ஒருவரை நியமிக்கலாமா என்று கிளர்ச்சி செய்தார்களா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். அதே போன்று நம்முடைய ராஜ்யத்திற்கு அடுத்துள்ள ஆந்திர தேசத்தைச் சேர்ந்த ஒருவரான ஸ்ரீ பட்டாபி சீதாராமையா அவர்களை மத்தியப் பிரதேசத்திற்குக் கவர்னராக நியமித்தார்கள். அவர் ஆந்திர தேசத்தைச் சேர்ந்தவர், அவர் தெலுங்கு பேசுபவர் என்று அவருக்கு மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்தவர்கள் கருப்புக் கொடி காட்டி பகிஷ்கரித்தார்களா ? அதை எதிர்த்து அப்பிரதேசத்தினர் கிளர்ச்சி செய்தார்களா ? கேரள தேசத்தைச் சேர்ந்த ஒரு மலையாளியை, அதாவது ஸ்ரீ ஜான் அவர்களை, இங்கு கவர்னராக
4-10 p.m. நியமித்தார்களே, அப்பொழுது ஏதாவது கிளர்ச்சி இங்கு நடந்ததா ? நாம் அவரைப் பகிஷ்கரித்தோமா ? ஆனல் அப்பொழுது ஒரு சில கருப்புச் சட்டைக்காரர்கள் கிளர்ச்சி செய்தார்கள். இப்பொழுது மத்திய அரசாங்கம் ஆட்சி செய்கிறது. மத்திய அரசாங்கம் தங்களுடைய பிரதிநிதிகளை இங்கு கவர்னராக நியமிக்கிறார்கள். தமிழ் நாட்டில் முதன் மந்திரியாக இருக்கக் கூடியவர்கள் தமிழ் தெரிந்தவர்களாக இருக்கவேண்டும் என்று சொல்வதில் கொஞ்சம் அர்த்தம் இருக்கிறது. ஆனல் மத்திய அரசாங்கம் தங்களுடைய பிரதிநிதியை நியமிக்கும்போது அவர் தமிழராகத்தான் இருக்கவேண்டும் என்று சொல்வதில் அர்த்தமே கிடையாது. ஆகவே, வட நாட்டவர், தென்னாட்டவர் என்று கூறுவது அறியாமையேயாகும்.

மேலும் இப்பொழுது தேசத்தில் பாஷைப் பிரச்னையைப்பற்றிப் பேசப்படுகிறது. நல்ல வேளையாக நமது தமிழ் நாடு புத்தாண்டு தைப் பொங்கலன்று 1,922 அரசாங்கக் காரியாலயங்களில் தமிழே ஆட்சி மொழியாக இருக்கவேண்டும் என்று உத்திரவிட்டிருக்கிறார்கள். அவ்விதம் உத்தரவிடப்பட்டு அதுவும் நல்ல முறையில் நடைபெற்று வருகிறது. அது வரவேற்கத்தக்க விஷயம்தான். இந்தத் தேசத்திற்கு ஹிந்தி மொழி அதாவது பொது மொழி அவசியம் என்று நம்முடைய அரசியலமைப்பு குறிப்பிட்டிருந்தாலும், அதில் குறிப்பிட்டபடி 1965-க்குள் தேசம் முழுவதும் ஹிந்தி மயமாக இருக்க வேண்டும் என்று சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது சம்பந்தமாக நம்முடைய ராஜ்ய சம்பந்தப்பட்ட மந்திரிகளும், இதரக் கட்சி பிரமுகர்களும் ஒன்று சேர்ந்து இன்னும் சொற்ப ஆண்டுகளுக்கு ஹிந்திமொழி மத்திய ஆட்சிமொழியாக இருந்துவரவேண்டும். அதோடு ஆங்கிலமும் இருந்து வரவேண்டும் என்று தீர்மானித்தார்கள். அதாவது ஹிந்தி பாஷை தெரியாத ராஜ்யங்களில் ஹிந்தியுடன் ஆங்கிலமும் இருந்து வரலாம் என்பதுதான். அதோடு குறிப்பாக, நம்முடைய ஆட்சி மொழி தமிழாக இருக்க வேண்டும் என்று தீர்மானம் செய்து மத்திய அரசாங்கத்திற்கும் தெரிவித்திருக்கிறோம். அது வரவேற்கத்தக்க விஷயம்தான். எது எப்படி இருந்தாலும் பாரத தேசத்திற்கு என்று ஒரு பாஷை இருந்தே தீரவேண்டும். ஒரு நாடு என்று இருந்தால் அதற்கு என்று ஒரு தனி பாஷை இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. லண்டனை எடுத்துக்கொண்டால், அங்கு ஆங்கிலம் தனி பாஷையாக அரசாங்க பாஷையாக இருக்கிறது. அங்கு ஆங்கிலம் தான் முதல் படியாக இருக்கிறது. ஜெர்மனி தேசத்தை எடுத்துக்கொண்டால், அதற்கு ஜெர்மன் பாஷை என்று இருக்கிறது. அவர்கள் முதல் பாஷையாகப் பேசுவது ஜெர்மன் பாஷை. அமெரிக்காவை எடுத்துக்கொண்டால், அவர்களுக்கு என்று ஒரு தனி பாஷை இருக்கிறது. சைனவை எடுத்துக்கொண்டால், அவர்களுக்கு என்று ஒரு தனி சைன பாஷை இருக்கிறது. ஜப்பானை எடுத்துக்கொண்டால், அவர்களுக்குத் தனி ஜப்பான் பாஷை இருக்கிறது. இப்படி அவரவர்களுக்குத் தனியான பாஷை இருந்து அதற்கு முதல்

10th February 1958] [Sri A. Subramanyam]

இடம் கொடுத்திருக்கிறார்கள். மேலும் அதிக ஜனத்தொகை கொண்ட ரஷியாவை எடுத்துக்கொண்டால், அங்கும் அப்படியேதான். சமீபத்தில் நமது நாட்டிற்கு ரஷ்யாவைச் சேர்ந்த புல்கானின் அவர்களும் குருஷேவ் அவர்களும் வந்தார்கள். அவர்கள் எந்த பாஷையில் பேசினார்கள் ? அவர்கள் தங்களுடைய சொந்த பாஷையாகிய ரஷ்ய பாஷையில்தான் பேசினார்கள். இதை ஒருவரும் மறந்துவிடக்கூடாது. இம்மாதிரி மற்ற தேசங்கள் தங்களுக்கு என்று ஒரு தனி பாஷையை வைத்துக்கொண்டிருக்கும்போது, நம் தேசத்திற்கு மட்டும் ஒரு தனி பாஷை இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லையா ? நம்முடைய நாட்டவர்கள் மற்ற தேசங்களுக்குச் சென்றால், அங்கு அவர்கள் ஆங்கிலத்தில் பேச வேண்டியதாக இருக்கிறது. ஏனென்றால், நம் நாட்டிற்குத் தனி பாஷை என்றுத் இதுவரையிலும் இருந்துவரவில்லை. இனியும் அப்படியே இருக்கலாமா ? அதனால்தான் நம்முடைய நாட்டிற்கு அதுவும் சமீபத்தில் சுதந்திரம் அடைந்த நாட்டிற்குத் தனியான ஒரு பாஷை இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அன்னிய, அயல்நாட்டு தேசங்களுடன் பேசும்போது நம் நாட்டவர்கள் ஆங்கிலத்தில் பேச வேண்டியதாக இருக்கிறது. நமக்கு என்று ஒரு பாஷையை ஏற்படுத்திவிட்டால், அந்த பாஷையில் பேசலாம் அல்லவா ? அப்படி நமக்கு என்று ஒரு பாஷை இருந்தால் அது நமக்கு ஒரு கௌரவம் அல்லவா ? நமக்கென்று பாஷை ஒன்றை ஏற்படுத்திக் கொள்ளாவிட்டால், நாம் எல்லாவிதத்திலும் சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று சொல்லிக்கொள்ளமுடியாது. ஆகையினால்தான் நம்முடைய தேசத்திற்கு ஒரு பாஷை இருக்க வேண்டும் என்று கருதி பல அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள். நம்முடைய தேசத்தில் ஹிந்தி பேசுகிறவர்கள் 42 சத விகிதம் இருக்கிறார்கள். மற்ற பாஷை பேசுபவர்கள் சொற்பத் தொகையினர்கள். அதை நாம் ஒப்புக்கொண்டுதானாகவேண்டும். அதனால், கூடியசீக்கிரத்தில் நாம் ஹிந்தியைக் கற்றுக்கொள்ளவேண்டும். ஆனால் சென்னையில் ஹிந்தி பேசாதவர்கள் இருப்பதால், அதைக் கற்றுக் கொள்வதற்கு மத்திய அரசாங்கம் கொஞ்சம் அவகாசம் கொடுக்க வேண்டும். **1965**-க்குள் ஹிந்தி கற்றுக் கொள்ளவேண்டும் என்று இருப்பதைவிட்டு **1975** என்றோ அல்லது **1985** என்றோ அமைத்துக் கொள்ளலாம். அதனால் நாட்டிற்கு ஆபத்தில்லை. கால அளவைக் கொஞ்சம் தள்ளிப் போடுவதே நலம். ஒரு குறிப்பிட்ட கால அளவை அமைத்துக் கொடுத்து அதற்குள்ளாக சென்னையிலுள்ளவர்கள் ஹிந்தியைக் கற்றுக் கொள்ளவேண்டும் என்று நிர்ணயம் செய்ய வேண்டும். அதன் பிறகுதான் சுமுகமாக ஹிந்தியை நல்ல முறையில் கற்றுக்கொள்ளமுடியும். ஹிந்தியே கூடாது, ஆங்கிலத்தையேதான் வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஒரு சிலர் கிளர்ச்சி செய்வது சரியல்ல. அப்படித் தனி பாஷை ஒன்றை நாம் வைத்துக்கொள்ளாவிட்டால், பிற நாட்டவர்கள் நம்மைப் பார்த்து என்ன நினைப்பார்கள் என்பதையும் நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். அவர்களுக்கு என்று ஒரு பாஷை இல்லையே என்று தான் நினைப்பார்கள். இதுவரையில், அதாவது இருநூறு அல்லது முன்னூறு வருஷங்கள் ஆங்கிலேயர்களுக்கு நாம் அடிமைப்பட்டிருந்தோம். அப்பொழுது அவர்கள் பாஷையை நாம் அவசியமாகக் கற்றுக்கொள்ள வேண்டியதாக இருந்தது. அவர்கள் நம்மை ஆட்சி செய்து வந்ததால் அவர்கள் தங்களுடைய பாஷையை இங்கு புகுத்திவிட்டார்கள். நாம் சுதந்திரம் அடைந்து சுமார் பத்து வருஷ காலமாகிறது. இது வரைக்கும் நமக்கு என்று ஒரு பாஷையை அமைத்துக் கொள்ளாமல் இருப்பது சரியல்ல. நாம் ஹிந்தியைக் கற்றுக்கொள்வதற்குக் காலத்தைக் கொஞ்சம் அதிகப்படுத்திக் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளவேண்டும். அதற்கு வேண்டிய அவகாசம் வேண்டும் என்று கேட்கவேண்டும். அப்படி இல்லாமல் ஆங்கிலமே இருக்கவேண்டும் என்று சொன்னால் அதில் அர்த்தம் இல்லை. அதற்கு நாம் சுதந்தரம் அடையாமலேயே இருந்திருக்கலாம். ஏற்கனவே நாம் அவர்களுடைய நடையுடை பாவனை முதலியவைகளில் ஈடுபட்டு வந்திருக்கிறோம். அதையே இன்னும் நாம் வைத்துக்கொள்ள வேண்டுமா ? ஆனால் தேசம் விடுதலை அடைந்த பிறகு அவைகளை வைத்துக்கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை. ஆகையினால்தான் நம்முடைய தேசத்திற்கு என்று ஒரு பாஷை தனியாக இருக்கவேண்டும். இருந்தே தீரவேண்டும். இதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. நாம்

[Sri A. Subramanyam] [10th February 1958

தமிழை ஆட்சி மொழியாக வைத்துக்கொண்டிருக்கிறோம். அதைப் போல மத்திய அரசாங்கத்துடன் தொடர்பு கொள்வதற்கு ஹிந்தியை நாம் கற்றுக்கொள்ளவேண்டும். அத்துடன் பிற நாடுகளுடன் தொடர்பு வைத்துக்கொள்ளவேண்டும் என்று கருதுகிறவர்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்ளலாம். இம்மாதிரியான ஒரு திட்டத்தை நம் அரசாங்கம் வகுத்துக் கொடுத்திருக்கிறது. அத்துடன் சென்னை ராஜ்யத்திலுள்ளவர்கள் ஹிந்தியைக் கற்றுக்கொள்வதற்கு இன்னும் அதிகப்படியான அவகாசம் வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இதை நாம் எல்லோரும் பரிபூரணமாக ஆதரிக்கவேண்டும்.

நம்முடைய நாட்டில் இன்றையதினம் ஒரு முக்கியமான விஷயம் நடந்துகொண்டிருக்கிறது. தி. மு. க. காரர்கள் நம்முடைய தேசத்தின் பிரதமர் அவர்கள் இந்நாட்டிற்கு விஜயம் செய்தபோது அதாவது சென்ற ஜனவரி மாதம் 6-ம் தேதி அன்று பல விதமான கிளர்ச்சி செய்யவேண்டும் என்றும், அவருக்குக் கருப்புக் கொடி காட்டவேண்டும் என்றும் சொன்னார்கள். எந்தத் தேசத்திலும் கிளர்ச்சி செய்வதற்கு ஒரு உரிமை உண்டு. எதிர்ப்பதற்கும் உரிமை உண்டு. ஆனால் அளவுக்கு மீறி அவர்கள் அக்கிரமமான காரியங்களைச் செய்யும்போதுதான் அதை யாரும் எதிர்க்காமல் இருக்கமுடியாது. அதை அரசாங்கமும் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. இது விஷயமாக நான் பலதடவைகள் இங்கு சட்ட சபையில் ஒரு விஷயத்தைப்பற்றிக் குறிப்பிட்டு வந்திருக்கிறேன். தெருவில் போய்க்கொண்டிருக்கக்கூடிய ஒருவனுக்கு கையில் ஒரு தடியை வைத்துக் கொண்டு அதை சுழற்றிக்கொண்டு போவதற்கு உரிமை உண்டு என்றும், அதை ஒருவரும் தடை செய்யமுடியாது என்றும், ஆனால் அவன் அப்படித் தடியைச் சுழற்றும்போது யாருடைய தலையிலாவது அடி பட்டால் அப்படி அதைச் சுழற்றுவதற்கு அவனுக்கு உரிமை கிடையாது என்றும் அப்படி மண்டை உடையும்படி அவன் கழியைச் சுழற்றினால் அதைத் தடுக்க அரசாங்கத்திற்கு உரிமை இருக்கிறது என்றும் நான் அடிக்கடி சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். சுதந்திரம் வந்துவிட்டது என்று பிறருக்குத் தீங்கு நேரிடும் வகையில் அந்த சுதந்திரத்தைப் பயன்படுத்திக்கொள்ளக்கூடாது என்று நான் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன். பிறருடைய தலையில் அடிபட்டு மண்டை உடையும் வகையில் அவன் கழியைச் சுழற்றினால் அதைத் தடுக்க அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறது. சுதந்திரம் என்றால் அதற்கு ஒரு வரம்பு கட்ட வேண்டும். அந்த முறையில் அதை அரசாங்கம் தடை செய்ய வேண்டும். நமது பிரதமர் அவர்கள் நமது நாட்டிற்கு விஜயம் செய்தபோது அவருக்குக் கருப்புக் கொடி காட்டவேண்டும் என்று சொன்னார்கள். அதை எந்த முறையில் காட்ட வேண்டும், எந்தெந்த இடத்தில் காட்ட வேண்டும், அதை எப்படி எப்படிச் செய்யவேண்டும், பிறருக்குத் தீங்கு நேரிடாமல் தங்களுடைய அதிருப்தியைக் காட்ட வேண்டும் என்று ஒரு திட்டம் வைத்துக்கொள்ளவேண்டும். இவைகளையெல்லாம் ஆராய்ச்சி செய்து ஒரு முடிவு செய்யவேண்டும். ஆனால் நடைமுறையில் அப்படிச் செய்யவில்லை.

4-20 p.m. இந்தியப் பிரதமர் என்ன வார்த்தை சொன்னார்கள்? "முட்டாள் தனம்", "காட்டுமிராண்டித்தனம்", "பைத்தியக்காரத்தனம்" என்ற இந்த மூன்று வார்த்தைகளை உபயோகித்தார். அவ்வளவுதானே. இவை நாட்டுக்கு உதவாத வார்த்தைகளா, மக்கள் விரும்பாத வார்த்தைகளா என்று நான் கேட்கிறேன்.

நாட்டை ஆளும்படியான பிரதமர் வரும்போது, அவருக்கு பகுத்தறிவு உள்ள ஒரு மனிதன் செய்யக்கூடியது என்ன? அதிலும் ஒரு கட்சியின் தலைவர் என்று சொல்லுகிறவர், எவ்வளவு பொறுப்புடன் பேச வேண்டும்? "இன்னும் கொஞ்சம் பேசியிருந்தால் செருப்பால் அடித்திருப்போம்; செருப்பு மாலை போட்டிருப்போம்" என்று பகிரங்கமாகப் பேசினால், அதை எந்த அரசாங்கமும் பார்த்துக்கொண்டிருக்காது. எந்த நாட்டிலாவது இப்படி நடக்குமா? ரஷ்யாவைப் பாருங்கள். எத்தனை மந்திரிகளை உத்தியோகத்தை விட்டு விலக்கிவிட்டார்கள்; எத்தனை பேரைச் சுட்டு வீழ்த்தினார்கள்; அந்த அரசாங்கத்திற்கு நேர் விரோதமாக எந்த

10th February 1958] [Sri A. Subramanyam]

வார்த்தையும் பேசக்கூடாது ! ஆனால், நம் நாட்டினுடைய ஜனநாயகத் தத்துவத்தின்படி, எதை வேண்டுமானாலும் யார் வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். பேசுவதற்கு உரிமை உண்டு ; எழுதுவதற்கு உரிமை உண்டு ; சொல்வதற்கும் உரிமை உண்டு என்று இந்த அரசாங்கம் தீர் மானித்து அதிகாரம் கொடுத்திருக்கிறபோது, ஒரு தேசத்தின் தலைவன் வரும்போது அந்தத் தலைவனைப் பகிரங்கமாக, அளவுக்கு மீறி, சொல்லத் தகாத வார்த்தைகளால், ஒரு கற்று அறிந்தவன் என்றோ, ஒரு பெரிய மனிதன் என்றோ சொல்லக்கூடியவர், "செருப்பால் அடிக்கவேண்டும் ; செருப்புத் தோரணம் கட்டவேண்டும்" என்று சொன்னால், அதைக் "காட்டு மிராண்டித்தனம்" என்று சொல்வதில் என்ன தவறு இருக்கிறது ? அதை "அறியாத்தனம்", "முட்டாள்தனம்", "பயித்தியக்காரத்தனம்" என்று சொல்வதில் தவறு இருக்கமுடியுமா ? யோசனை செய்து பாருங்கள். இதைவிட்டு பலர் பலவிதமாக இதைப்பற்றிப் பேசுகிறார்கள். இந்தச் செய்கையைக் கண்டித்துப் பிரதமர் நேரு அவர்கள் வேறுவித வார்த்தை களில் சொல்லியிருக்கலாம். அப்படியெல்லாம் சொல்லாமல், "பைத்தியக் காரத்தனம்" என்று மட்டும் சொன்னார். அதையும் ஆட்சேபித்தால் இவர்கள் கூற்றை என்னவென்று நினைப்பது ? தன் புத்தியும் இல்லை ; சொல் புத்தியும் இல்லை என்று சொல்வதைத்தவிர வேறு என்ன வென்று சொல்வது ? பைத்தியக்காரத்தனம் என்றுதான் சொல்ல வேண்டும். இதில் தப்பு இல்லையே !

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி அவர்கள் அறிஞர்தான். நம்முடைய ராஜ்யத் திற்குச் சிறந்த தலைவராக இருந்தவர்தான். அதைப்பற்றி ஆட்சேபணை இல்லை. ஆனால், இந்த நாட்டுக்கு ஆங்கிலம் தான் வேண்டுமென்று அவர் சொன்னால், அதை யாராவது ஒத்துக்கொள்ள முடியுமா ? இதை முட்டாள் தனம் என்று சொன்னால், இதில் என்ன தவறு இருக்கிறது ? நாம் யோசனை செய்யவேண்டும். ஒரு தேசத்திற்கு ஒரு பொதுவான பாஷை, தனக்கு என்று வேண்டுமென்று கேட்கும்போது, அதற்கு என்ன ஆட்சே பணை இருக்கமுடியும் ? எப்படி இந்த ராஜ்யத்திற்குத் தமிழ்மொழிதான் ஆட்சிமொழியாக இருக்கவேண்டுமென்று நாம் எல்லோரும் விரும்பு கிறோமோ, அதேபோல பல ராஜ்யங்களைக் கொண்டதாக இருக்கும் நமது இந்திய தேசத்தில் இருக்கக்கூடிய மக்களில் 42 சத விகிதத்தினர் பேசக் கூடிய ஒரு மொழியாகிய ஹிந்தி மொழியை ஏன் நாம் நமது தேசத்தின் பொதுமொழியாக ஒப்புக்கொள்ளக்கூடாது என்று நான் கேட்கிறேன். ஒரு சத விகிதமா ? இரண்டு சத விகிதமா ? 42 சத விகித மக்கள் அன்றோ இந்த மொழியைப் பேசுகிறார்கள் ? அந்த மொழியை நாம் எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டியதுதானே. அங்ஙனமிருக்க அதனால் ஏதோ கஷ்டங்கள் நமக்கு வரும் என்று சொல்லப்படுகிறது. அப்படி என்ன கஷ்டம் வரப்போகின்றது? இந்தி பாஷையைப் படிக்க முடியாது என்று பிள்ளைகள் கருதுகிறார்களா ? அப்படி ஒன்றும் இல்லையே ! பிள்ளை கள் எந்த பாஷையைக் கற்றுக் கொடுத்தாலும் கற்றுக்கொள்ளுகிறார்கள்.

நான் சேலத்தில் இருக்கிறேன். அங்கே சௌராஷ்டிரர்கள் இருக்கிறார் கள். அந்த பாஷை எனக்கு நன்றாகப் புரிந்துவிடுகிறது. பலப்பல வார்த் தைகளின் பொருள் சுலபமாகப் புரிந்துவிடுகிறது. அதேபோல "கஹாம் ஜாதே ?" என்று ஹிந்தியில் கேட்டால், "எங்கே போகிறாய் ?" என்று பொருள் சுலபத்தில் விளங்கிவிடுகிறது. "இதர் ஆவ்" என்னும் வாக்கியத் திற்கு "இங்கே வா" என்று புரிந்துவிடுகிறது. "எக்கடா ?", "எமி சேஸ் தாவு ?" என்று தெலுங்கில் பேசும்போதும் அவைகளின் பொருள் விளங்கிவிடுகிறது. அதுபோல எந்த மொழியாக இருந்தாலும் பழக்கத் திற்கு வந்துவிட்டால் எல்லாம் சுலபமாகிவிடுகிறது. இம்மாதிரிப் பேசும் போதே பலப்பல சொற்களின் பொருள் தெரிந்துவிடும்போது, முறையாக ஒரு மொழியை எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டால் சுலபமாக ஆய் விடாதா ? ஒரு இந்திய பாஷையை, அதாவது ஹிந்தியை, தேசத்தின் பொதுமொழியாக ஏற்றுக்கொள்வதை விட்டுவிட்டு, ஏதோ ஆங்கிலம் பெரிய பாஷை, என்று மனதிலே ஏதோ காரணத்தை வைத்துக்கொண்டு பிதற்றிக்கொண்டு போனால், எதற்கும் ஒரு வரம்பு வேண்டாமா ? அந்த முறையிலே ஒருசிலர் சேர்ந்துகொண்டு இப்படிக் கிளர்ச்சி செய்யவேண்டு மென்று பேசுகிறார்கள்.

[Sri A. Subramanyam] [10th February 1958

திராவிட நாடு வேண்டுமென்று சொல்கிறார்கள். திராவிட நாடு எப்படி வரும் ? எது சிறந்த திராவிட நாடு ? கன்னடியர்கள், மலையாளிகள், ஆந்திரர்கள், தமிழர்கள் இத்தனை பேர்களும் வாழக்கூடிய நான்கு பிரதேசங்களும் சேர்ந்தது திராவிட நாடு. திராவிட நாடு என்பது அர்த்தமற்றது என்று ஆந்திரர்கள் பிரிந்து போய்விட்டார்கள். "நான் பறையமாட்டேன்" என்று கேரளத்தவர்களும் போய்விட்டார்கள். "ஒந்து, இரடு" என்று கன்னடியர்களும் பிரிந்துவிட்டார்கள். இப்பொழுது தமிழர்கள்தான் இருக்கிறோம். தமிழ் நாடு இருந்தால்போதும் என்று கேட்கிறார்கள். எதற்காகத் தமிழ் நாடு ? இப்பொழுது பச்சைத் தமிழர் தானே ஆட்சி பண்ணுகிறார் ? திரு. காமராஜருக்கு இல்லாத தமிழ்ப் பற்று ? திரு. பக்தவத்சலத்திற்கு இல்லாத தமிழ் ஆர்வமா ? திரு. ஸி. சுப்ரமண்யம் பேசாத தமிழா ? மூன்று பேர்களும் செய்யாத தமிழ்த் தொண்டை யார் செய்துவிடப்போகிறார்கள் ? தமிழர்களுடைய கட்சியை இதுவரை வேறு யாராவது எந்தக் கட்சியாவது பேசியிருக்கிறார்களா ? இத்தனை வருஷகாலம் ஆட்சி நடந்துவந்திருக்கிறது. மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வந்ததிலிருந்து இப்பொழுது இருக்கும் ஆட்சிக்கு முன்புவரை யார் யாரோ ஆட்சிக்கு வந்திருக்கிறார்களே, அவர்களில் யாராவது தமிழைப்பற்றிப் பேசியிருக்கிறார்களா, தமிழில் ஆட்சி நடத்தியிருக்கின்றார்களா என்று நான் கேட்கிறேன்.

வெள்ளைக்காரர்கள் இங்கு வந்தபோது அவர்கள் காலில் விழுந்து கும்பிட்டு தாசானுதாசன் என்று சொல்லி, "இந்தத் தேசம் அடிமையாக இருக்க வேண்டும் ; நாங்கள் உங்களுடைய அடிமைகள் ; இத்தனை மக்களும் உங்களுக்குத் தொண்டு செய்து வருகிறோம்" என்று சொன்னவர்கள் இன்று ஏதோ சுதந்திரத்தை வாங்கித்தந்தவர்களாகவும் அறிவின் களஞ்சியமாகவும், பகுத்தறிவின் சிகரமாகவும், சிந்தனையின் சிற்பியாகவும் நினைத்துக்கொண்டு தான்தோன்றித்தனமாகப் பேசினால் எத்தனை நாள் பொது மக்கள் பார்த்துக்கொண்டிருப்பார்கள் ? எத்தனை எத்தனை நாட்களுக்குப் பொதுமக்களையெல்லாம் இப்படி ஏமாற்றிக்கொண்டிருக்க முடியும் ? ஒரு சிலரை சில காலம் ஏமாற்றலாம். எல்லோரையும் எந்தக் காலத்திலும் ஏமாற்றிக்கொண்டிருக்க முடியாது. சட்டசபையிலாகட்டும், வெளியிலாகட்டும், தட்டிப்பேச ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப் பிரசண்டன் என்பது போல, தங்களுக்குத்தான் பேசத் தெரியும் என்று பேசுகிறார்கள். மக்களிடையே ஒரு புது வழி காட்டுகிறார்கள். ஏதோ சொல்லுகிறார்கள். அதை ஒருசிலர் நம்பிவிடுகிறார்கள். ஆகவே, உண்மையாக நம்முடைய கவர்னர் பெருமான் அவர்கள் கூறியுள்ள ஒரு விஷயத்தை நாம் நன்றாகக் கவனிக்கவேண்டும். "நீண்ட தூரத்திலிருந்து நான் வந்திருக்கிறேன். தமிழர்களுடைய பண்பாட்டுக்காகவும், முன்னேற்றத்திற்காகவும் நான் சேவை செய்யவே வந்திருக்கிறேன்" என்று சொல்கிறார். அவர் எந்த நாட்டவராக இருந்தால்தான் என்ன ? அவர் சொன்னவை—நம்முடைய நாட்டிலே இனிமேல் தமிழ் மக்கள் உயர்ந்து, நல்ல நிலையிலே பண்பட்டு, நல்ல நலம் பெறும்படியான மார்க்கத்திற்கு வழிகாட்டியாக அல்லவா அவர்களுடைய வார்த்தைகள் அத்தனையும் இருக்கின்றன ? ஆகையால், கவர்னர் பெருமான் அவர்களுடைய வார்த்தைகள், பேச்சுக்கள் அத்தனையையும் நாம் எப்படி வெறுக்க முடியும் ? ஆகவே, அவருடைய வார்த்தைகளைப் பொதுமக்கள் உற்சாகமாக வரவேற்று ஏற்றுக்கொள்ள வேண்டியது நியாயம்தானே. இந்த நிலைமையிலே தமிழர்களுடைய உணர்ச்சி இருக்குமானால், தமிழர்களாகிய நமக்கு அதிவிரைவிலே நலன்கள் உண்டாகக் கூடும்.

சட்டசபையில் அதிவிரைவிலே தமிழை ஆட்சிமொழியாக்கிச் சட்டம் கொண்டுவந்தோம். எவ்வளவு நல்ல முறையில் ஆட்சி செலுத்தவேண்டுமோ அந்த நிலைமையை ஏற்படுத்தினோம். ஆனால் தமிழைப்பற்றிப் பேசக்கூடாது என்று நினைத்தவர்கள், தமிழில் பேசுவதை அகௌரவம் என்று நினைத்தவர்கள், தமிழில் பேசவேண்டும், தமிழ் நாடு வேண்டும் என்று சொல்கிறார்கள். தமிழ் நாடு எப்படி இயங்கமுடியும் ? நாம் ஒரு தேசத்தில் ஐக்கியப்பட்டிருக்கிறோம். பல ராஜ்யங்களைக்கொண்ட ஒரு தேசமாக நாம் விளங்கிவருகிறோம். தமிழ் நாடு என்று தனியே பிரித்து வைத்துக் கொண்டு, "குண்டு சட்டியில் குதிரை ஓட்டுவதா ?". இந்தியாவுக்குப்

10th February 1958] [Sri A. Subramanyam]

பக்கத்து நாடாகிய பாகிஸ்தான் அமெரிக்கத் தேசத்திடமிருந்து நிறைய ஆயுதங்களை வாங்கிக் குவித்து வைத்துக்கொண்டிருக்கிறது ; அணு ஆயுதங்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறது ; அவைகளில் ஒன்றைத் தூக்கி மண்டை மேலே போட்டால் யார் உதவியை நாடுவது ? கேரள நாட்டினரோ, ஆந்திர நாட்டினரோ, கன்னட நாட்டினரோ உதவிக்கு வருவார்களா ? வரமாட்டார்கள். தமிழ் நாடு என்றும், திராவிட நாடு என்றும் தனித்து இருந்தால் எப்படி இருக்க முடியும் ? இதை உணரப் பகுத்தறிவு ஒருவருக்கும் இல்லையே ! இந்த அறிவைப் பகுத்து, அறிந்து கொடுக்க வகை இல்லையே ! அவர்கள் சொல்வதைச் சில வாலிபர்கள், நறுக்கு மீசை வைத்துக்கொண்டு குறுக்கு வழியிலே சரி என்று நினைக்கிறார்கள். இது என்ன என்றே புரியவில்லை. காரணம், தேசத்திலே ஆளும் கட்சி நல்ல முறையிலே மக்களுக்கு இவைகளை எடுத்துச் சொல்லாதது பெருங்குறை. குற்றம் செய்தவர்களை உடனடியாகத் தண்டிக்காததும் பெருங்குறை. அதை இனிமேலாவது இந்த அரசாங்கம் திறம்படச் செய்தால் கண்டிப்பாக இந்த ஆட்சியினருக்கு நல்ல பெயர் ஏற்படும் ; நல்ல கௌரவம் ஏற்படும்.

தவிர, ஒரு குற்றத்தைச் செய்ய ஒருவனைத் தூண்டுகிறவனுக்கு மூன்று நாள் சிறைத் தண்டனை என்றும், அந்த வார்த்தையைக் கேட்டு குற்றம் செய்தவனுக்கு ஆறு நாள் தண்டனை என்றும் சொன்னால், இது அவ்வளவு பொருத்தமாக இல்லை. "குத்து, கொலை செய், வெட்டு, கொளுத்து" என்று சொல்கிறவர்களுக்கு ஆறுமாத தண்டனை. ஆனால் அதையே யாராவது ஒரு சிறு பையன் செய்துவிட்டால் அவனுக்கு 1½ வருஷ தண்டனை என்றால் அதற்கு இடம் அளிக்கும் சட்டத்தின் குறைபாடுதான் அது. நீதிபதியும் சரியானபடி நீதியை அனுசரித்துக் காரியங்கள் செய்வதாகத் தெரியவில்லை என்பது அடியேனுடைய கருத்தாக இருக்கிறது. 4–30 p.m.

சட்டசபையில் பலமுறை இதைப்பற்றிக் கூறியிருக்கிறேன். திருவல்லிக்கேணியில் ஒரு பிராமணச் சிறுவன் போய்க்கொண்டிருந்தான். திடீரென்று ஒருவன் வந்து அவன் கன்னத்தில் அறைந்து, பூணூலை அறுத்து, அவனுடைய சிட்டுக்குடுமியை அறுத்துவிட்டு ஓடினான் என்பதைப் பத்திரிகையில் பார்த்தோம். அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று இந்தச் சபையிலேயே முன்னொரு தடவை நான் கேட்டேன். வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுவதாகச் சொன்னார்கள். என்ன எடுத்தார்களோ தெரியவில்லை. ஒரு தலைவர், ஒரு கட்சியின் அதிபதி இக்காரியங்களைச் செய்யவேண்டும் என்பதாகத் தூண்டிக்கொண்டே இருந்தார். அதைக்கூடத் தடுக்க நடவடிக்கை எடுக்கவில்லையே. இன்னும் பலபேர்கள் பூணூலை இழந்த பின்னர், குடுமிகளை இழந்த பின்னர் இதுபோன்ற பல அசம்பாவிதமான நிகழ்ச்சிகள் நடந்த பின்னர் தக்க நடவடிக்கையை எடுத்துக்கொள்வதற்கு, பல கொலைகள் நடந்தபிறகு நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு சர்க்காருக்கு உத்தேசமா என்றுகூடக் கேட்டேன். அப்படி ஒன்றும் இல்லை, இனி கவனிக்கப்படும் என்று சொன்னார்கள்.

ஆனால் நாட்டில் நடந்துகொண்டு வருவது என்ன ? சமீபத்தில் நவம்பர் மாதம் **26**ந் தேதி திருச்சியில் ஆற்றங்கரையில் ஒரு சிலர் குளித்துக் கொண்டிருந்தார்கள். பெண்களை அவமானம் செய்துவிட்டு, சில பேர்களுடைய குடுமிகளையும், பூணூலையும் அறுத்தெறிந்துவிட்டு சிலர் ஓடியிருக்கிறார்கள். கரூரிலும் இப்படித்தான் ஒரு சம்பவம் நடந்திருக்கிறது. அரசாங்கம் என்று ஒன்று எதற்காக இருக்கிறது ? நம்முடைய சட்டம் என்ன சொல்கிறது ? மதத்திற்கும், கடவுளுக்கும் உள்ள கொள்கையில் இந்த அரசாங்கம் தலையிடாது, நடுநிலைமை வகிக்கும் என்றால் எது நடுநிலைமை ? ஒருவன் குற்றம் செய்கிறான். பிறரைத் துன்புறுத்துகிறான். தகாத வார்த்தைகளால் தூஷிக்கிறான். ஆனால் அவனைத் தண்டிப்பதற்குத் தகுந்த சட்டம் கிடையாது. இப்படிப்பட்ட குற்றம் புரிபவர்களுக்குத் தகுந்த தண்டனை அளிக்கச் சட்டம் போட்டாக வேண்டும். ஒருவன் கொலை செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு **(Attempt to murder)** ஒரு காரியத்தைச் செய்தால் கண்டிப்பாக அவனுக்குத் தூக்குத் தண்டனைதான் அளிக்க வேண்டும். தூக்குத் தண்டனை அளிக்காவிட்டாலும் மூன்று வருஷம், நான்கு வருஷம், எழு வருஷம் என்று கடின காவல் தண்டனை அளிக்க வேண்டும். கொலை செய்வதற்கு ஆஸிட்டை ஊற்றினாலும், குத்தினாலும்

